உ

குகமயம்.

பிரசுரம் 11.

ஓம் குமாரகுருப்யோ நம:

# வரகன்னியாப் பொருத்த விளக்கமும் — — அங்காரகப் பொருத்தமும்.

வெளியிட்டோர்:—

சு. ஏ. முத்துக் குமாரஸ்வாமி,
சித்தாந்த கணித ஜோதிஷன்,
பறங்கிப்பேட்டை

1933.

உ

குகமயம்.

பதிஞோம் பிரசுரம்.

ஓம் குமார குருப்யோ நம:

# வரகன்னியாப் பொருத்த விளக்கமும் —

# —அங்காரகப் பொருத்தமும்.

---

இது

பலதீபிகை, புட்பபந்தம், சோதிட கணிதம், நீலகண்ட தாஜிகம், ஸ்ரீபதி ஜாதக கர்மபத்ததி, சிற்பரத்நாகரம், விஸ்வகர்மீய ஆயாதிப் பொருத்த விளக்கம், மச்சசாஸ்திரம், வைத்தியரத்ந வசனபூஷணம் சித்தாந்த திருக்கணிதம் இவைகளின் பதிப்பாசிரியர்கள்

பறங்கிப்பேட்டை
ஜோதிஷ வைத்திய பண்டிதர்
ஸ்ரீமாந் சு. ஏ. குமாரஸ்வாமி ஆச்சாரியாரவர்கள் சகோதரனும்
மதுரைத் தமிழ்ச் சங்கத் தங்கத்தவரு ளொருவரும்
பிறைசை லூத்தரன் மிஷியோன் பெண்கள்
பாடசாலைத் தமிழ்ப் பண்டிதருமான

**வித்வ ஸ்ரீமாந் ப. அ. கிருஷ்ணஸ்வாமிப் பிள்ளையவர்கள்**

மாணவனுமான

பறங்கிப்பேட்டை

சித்தாந்த கணித ஜோதிஷன்

**சு. ஏ. முத்துக்குமாரஸ்வாமியால் திரட்டப்பெற்று**

பறங்கிப்பேட்டை அகரம்

**உயர்திருவாளர். க. க. மா. முருகேச செட்டியார்**

அவர்கள் உதவியால்
அச்சிடப்பெற்றது.

ஆங்கீரஸஹு மகாரவி

 *1933* 

குகமயம்.

ஓம் குமார குருப்யோ நம:

# வரகன்னியாப் பொருத்த விளக்கம்.

## முன்னுரை.

பெருமணப் பொருத்தப் பெற்றி யுரைசெயத்
திருவருண் முருகன் திருவடி காப்பாம்.

---

பூர்வ காலந்தொட்டு நந்தேசத்துப் பண்டிதர் முதல் பாமரர் வரையு முள்ள எல்லாச் சனசதளங்களும் சோதிட சாஸ்திரத்தின் கண் மிக்க அபிமானம் வைத்துள்ளார்கள். இவர்களுள் பெரும் பான்மைய ராகிய நம்மனோராம் இந்துக்கள் தமது தேசத்திற்கேனும் தேகத்திற் கேனும் எவ்வகை இடுக்கண் ஏற்படினும் சநாதன தருமத்தை ஒரு சிறிதும் கைவிடவே மாட்டார்கள். அன்றியும் இத்திற விஷயங்களை நந்தம் மக்கள் பால் ஒவ்வோர் சிறிய பெரிய காரியங்களுன்றும் கண் கூடாகக் காணலாம்.

விவாக விஷயத்தில் ஸ்திரீ புருஷர்களுடைய ஜாதகங்களைச் செவ்வையாய் ஆராய்ந்து பரிசீலனை செய்து முக்கியமாய்ப் பொருத் தங்கள் இருக்கின்றனவா வென்று தெரிந்துகொண்ட பின்னரே பெண்களைக் கொடுப்பதற்கும் கொள்வதற்கும் சம்மதிப்பார்கள் என்ப தொன்றே நண்டைக் கேற்புடைத் திருஷ்டாந்தமா மென்றறிக.

இவ்வழக்கம் பண்டைக்காலந் தொட்டு இதுகாறும் நடை பெற்றே வருகின்றது. எனினும் நவீன மாயதோர் இயக்கத்தான் (ஒரு சிறிது) இடரு முண்டெனப். இப் பொருத்த நிமித்தங்களைப் பார்த்து இருதிறத்தினருக்கும திருப்தியாய பின்னர்தான் தம்பதி களுக் கனுகூலமான சுப முகூர்த்தங்களில் விவாக சுபச் சடங்கு

ணைச் செய்விப்பார்கள். இவ்வாறு புரிந்தால்தான் தம்பதிகள் நற்பேறும் பிரசம்பத்துகளும் பெற்று இனிது வாழ்வார்கள் என்பது அவர்கள் எண்ணம்.

முற்காலத்தில் பட்டினத்தான் சிறுகுடி எய்தி வேட்டலும், பாக்கத்தான் மூதூர் எய்தி வேட்டலும் பிறவுமாகிய கற்பியலாஞே களவியலாஞே நேரும் காந்தருவ மணத்தையோ பிறிதொன்றையோ யான் ஈண்டு இழித்துக் கூறி அவ்வாறு செய்தாற்ருன்,

''காதன் மனையாளுங் காதலனு மாறின்றித்
தீதி லொருகருமஞ் செய்பவே—ஓதுகலை
எண்ணிரண்டு மொன்றுமதி யென்முகத்தாய் நோக்கருன்
கண்ணிரண்டு மொன்றையே காண்.''

என்னும் பெரியார் வாக்கு பிழையா தொழியு மெனக் கூற வரவில்லை. அவ்வாறு புரியாக்காலு அவ்வாப்த வாக்கு பிழையா தொழியு மெனவே கொள்க.

நம் தம் புராதன சாஸ்திரங்களில் பெண் கொள்ளற்கும் கொடுத்தற்கும் ஏற்படுத்தப்பட்டுள்ள இவ் விதிகளுக்கு மாருக நம்மவர்கள் இதுபோது பெரும்பாலும் அழகையும் அதிகாரத்தையும் தனத்தையும் இக் காலத்துக் கேற்ற பிற அந்தஸ்துக்களையும் நோக்கிப் பெண்ணைக் கொடுக்கவும் கொள்ளவும் வெளிப்படையாகவே சம்மதித்து நடத்துவதினுலேயே மணப்பொருத்த விதிகள் யாவும் இஞ்ஞான்று பெரிதும் அழிந்து பட்டுக் கிடக்கின்றன.

இவ்வாறு குலத்தி லுதித்துப் பொருத்த நிமித்தமுள்ள மங்கையைப் பூர்வீக அநுஷ்டானங்களை ஒட்டி மணப்பிக்காது இஷ்டம் போல நடப்பிப்பதால், குடும்பங்களில் ஸ்திரீ புருஷர்களுக்குள் அன்பின்மை, ஒற்றுமையின்மை, சந்ததியின்மை முதலியன ஏற்படுகின்றன. ஒருவேளை சந்ததி யுண்டாயினும் துர்ப்பல சந்ததி, கரு வழிதல், கருப்பரோகம், பிறந்திறத்தல் முதலியன ஏற்படுகின்றன.

எனினும், நம்மவர்களுட் சிலர் இவ்விதி விலக்குகளை ஒரு சிறிதும் கவனியாது, அவ்வச் சமய சந்தர்ப்பங்களுக்கு மாத்திரம் உருசியைத் தரத்தக்க தனத்தையும் அழகையும் பிறவற்றையும் நோக்குவா

யாயினர். அன்னூர் அழகாதி பிற நோட்டங்களைக் கவனிக்கவேண் டாமென்று நாம் கூற வரவில்லை. எற்றுக்கெனின் அதிகாரத்தா லும் அழகாலும் தனத்தாலும் ஏற்படும் விவாகம் தம்பதிகளுக்குன் நன்மையைத் தாரதென்னும் பெரியார் கண்ட உரிய அநுபவ உண்மை யொன்றினையே ஈண்டைக்குத் தீட்ட எழுந்தன மாகலின். எனவே, நம் பூர்வீக கிரந்தங்களில் விதிக்கப்பட்டுள்ள நட்சத்திரப் பொருத்தம் முதலியன யாவும் அவசியம் கவனிக்கப்பட வேண்டு மென்பது சித்தாந்தமாம்.

ஸ்திரீ புருஷர்களுக்கு ஜாதக மில்லாவிட்டால் நிமித்தம் பார்த் தேனும் விவாக நிச்சயம் செய்துகொள்ள வேண்டுமெனக் கூறி யிருப்பதோடு நில்லாமல், தாங்கள் ஆச்ரயிக்கும் கந்தன் முதல் காடு காள் வரையு முள்ள எந்தத் தெய்வத்தினிடமாவது குறையிரந்து கேட்டு மணம் முடிப்பிக்க வேண்டுமெனக் கூறுவதால் பொருத்த நிமித்தம் அவசியம் வேண்டுமென்ப தொன்றே நம் முன்னோர்களின் முடிபாம்.

எனவே, இத்திறப் பெற்றி வாய்ந்த நம் பழைய கொள்கைகளை நாமநுபவிப்பதோடு நில்லாமல், தற்காலம் நம்மில் பெரிதும் விலகி நடப்பவர்களையும் அநுபவிக்கச் செய்வித்துச் சகல சாஸ்திரங்களிலும் வரையறுத்துக் காட்டிய சுபச் சடங்குகளுள் முதன்மையாகக் கொள் ளற்பாலது விவாக மொன்றே யாமெனவும், அஃதொன்றே இகபர மிரண்டிற்கும் இன்றியமையாச் சாதன மெனவும், அத்தகைய விவா கம் பெண்களின் மறுமணம் நீத்த ஒத்த குடி ஒழுக்கங்களை நாடிய மணமகனுக்கும் மணமகளுக்கும் பொருத்த முடைத்தெனக் கண்டு கொண்ட பின்னரே விவாகத் துறைக்கண் நுழைதல் அன்னோர் கொள்கை யாமென்பதும் பிறவும் அறிவித்து நம் வழிப்படுத்தி எல்லா நன்மையும் பெற்றுய்வோமாக. சுபம்.

உலகின் மாக்க ளுணர்த்திய வுடுக்கோ
ணிலவிய வாங்கு நிகழ்த்து மணமே
யுயர்நல முடைத்தா முயர்நல முடைத்தா
மெற்றுக் கென்னி னியம்புதுங் கேண்மோ !
தாலிப் பொருத்தந் தகுதிப் பொருத்தமென்
றோலிடு வேத வுத்தமப் பொருத்த
மதுவுமே யன்றி யழகிய பொருத்த
மொன்றினோ டொன்று மோரைந்தி னோடைந்து
முளவா மாகலி னுரியன கொண்டு
அண்டு நல்லன அன்பொடு தழீஇ
அண்டாத் தீயவா மல்லன வொரீஇ
வாழ்க நீடு வாழ்க வென்று
வரைப வரன்முறை புரைதப வாற்றி
னெள்ளா நலமு முள்ளா மெனவே
பொருத்த விருத்தம் பொருந்தா துஞற்று
நன்மணம் பொன்மண மன்மண
மிகவே வாழியர் வேட்கை தகவே.

பிறையாறு,
ஆங்கீரசஹு ஆவணிமீ 20உ

இங்ஙனம்,
ப. அ. கிருஷ்ணஸ்வாமி,
தண்டமிழ்த் தொண்டன்.

குகமயம்

ஓம் குமார குருப்யோ நம:

# வரகன்னியாப் பொருத்த விளக்கம்.

## பதிப்புரை.

உலகத்தில் பொருத்த நிமித்தம் பார்த்துப் பெண் கொள்ளக் கொடுக்க ஏற்பாடு செய்யின் இரு கோத்திரங்களும் செழித்துச் சீரடையுமெனப் பெரியார் கூறுப. இதுபற்றிய விஷயங்களை முன்னுரை யொருவாறு தெரிவித்திருக்கின்றது. இவ்வகைப் பொருத்தங்கள் 10 என்றும் 12 என்றும் 20 என்றும் பலவாருகப் பன்னூல்கள் பகரும். இவைகளுள் 10 பொருத்தங்களே விசேஷமானவை. அப் பத்துள்ளும் ஒரு நான்கே முக்கியமானவை. அவற்றுள்ளும் நூல் பொருத்தம் என்னும் கழுத்துப் பொருத்தம் ஒன்றே அதி முக்கியமானது. சாஸ்திரமறியாச் சாமானியருங்கூட "என் ஐயா கழுத்தும் வயிறும் எப்படி யிருக்கிறது" என்று கேட்பதும் உண்டு. எனவே நூல் பல மொன்றே பிரதான மென்பது பெற்றும். சமுசாரத்தில் பல்வகைச் சங்கட சந்தோஷங்கள் ஏற்படினும் மஞ்சட் சரடு மஞ்சள் குங்குமத்தோடு ஒரு கட்டுக் கழுத்தி யிருப்பின் அவள் நற் சகுனத்திற்கேனும் உரியவளாவாள் எனப் பெரியோர் மொழிப. ஆகவே நூல் பலமே பலம். எற்றுக்கெனின்:—

"சாதக நற்பலன் வழுத்து முறைமையைக் கேண்மடவார்
 தமக்குமணப் பொருத்தமதைத் தான் பார்க்குமந்தப்
போது தசப்பொருத்தம் பார்ப்பதற்கு முன்னாசச்சுப்
 பொருத்தம் பார்ப்பதுபோலு முகூர்த்தங்கடமக்கே."

எனும் மேற்கோளுமிருத்தலின், சில நூலுடையார் கயிற்றுப் பலமில்லாவிடினும் ஏனைய நான்காகிய தினம்—மாகேந்திரம்—இராசி—

இராசியதிபர் மித்திரம் ஆதிய இருப்பின் தாலிப் பொருத்தம் பொருந்து பொருத்தமா மென்ப. எப்பலத்தாலேனும் கயிற்றுப் பொருத்தம் ஒன்றுமாத்திரம் இருத்தல் வேண்டுமென்பதே எமது துணிபுமாம்.

இந்த நூலில் பத்துவகைப் பொருத்தங்களோடு பிறநூல் கூறுமாறு நாடிப்பொருத்தம் ஒன்றனையும் நாட்டியுள்ளேன். இப்பொருத்தங்கள் சந்தேக விபரீதங்கள் அற அறிவிக்கப் பட்டிருக்கின்றன. மேலும் இந்நூலிறுதியில் அங்காரகப் பொருத்தமென்பதொன்றும் அறிவிக்கப் பட்டிருக்கின்றது. அதனை அங்காரக தோஷமென்னாது பொருத்தமென்றெழுதியதில் ஒரு விசேஷமும் அறியக்கிடக்கின்றது. அங்காரக தோஷம் இல்லானும் உள்ளாளும், இல்லாளும் உள்ளானும் மணம்செய்து கொள்ளுவதால் பற்பல இன்னல் விளையுமென்பது ஒருதலை போலும். அச் சாதகங்களுள் தோஷாபவாதமிருப்பின் கேடேற்படாது நன்மையே உண்டாமென்பதனையும் இந்நூல் எடுத்துரைக்கின்றது. எனவே, இந்நூல், பொருத்தநிமித்த பூஷணமென போற்றற் குரித்தென்க. இந்நூலை அச்சிடுவிக்கப் பொருளுதவியவர் பறங்கிப்பேட்டை அகரம் உயர்திருவாளர் க. க. மா. முருகேச செட்டியார் அவர்களேயாவர். இவர்கள் பிதா தருமரத்நாகரம் ஸ்ரீ. ச, க, மாணிக்க செட்டியாரவர்கள் 1915௵-ல் சோதிட கணிதம் என்னும் நூலைத் தமது பொருளுதவியினாலேயே அச்சிடுவித்து உபகரித்தது போல் இவர்களும்,

"எந்தைநல் கூர்ந்தா னிரப்பார்க்கீந் தென்றவன் மைந்தர்த மீகை மறுப்பாரோ—பைந்தொடீஇ, நின்று பயனுதவி நில்லா வரம்பையின் கீழ்க்கன்று முதவுங் கனி" என்னும் ஆன்றோர் வாக்கிற் கிணங்கத் திரவிய சகாயஞ் செய்து இதனைப் பொன்னூலாக்கினார்கள். எனவே, இவர்களும் இவர்கள் பெற்றோர்கள் சகோதரர் முதலான யாவரும் பல்வகைச் செல்வங்களோடு அரோக திடகாத்திர ஆயுராரோக்கியங்களுடன் நீடூழி வாழ்ந்து சுகிக்க நிமலன் அருள் புரிவானாக. எல்லாம் வல்ல முருகக்கடவுள் திருவருளால் இவ்வினிய நூல் இனிதுவாழ்க. சுபம், சுபம்.

பறங்கிப்பேட்டை
ஆங்கிரஸ௵ ஆவணி௴
30௳

இங்ஙனம்,
ச. ஏ. முத்துக்குமாரஸ்வாமி,
சித்தாந்த கணித ஜோதிடன்.

உ

குகமயம்.

ஓம் குமார குருப்யோ நம:

# வரகன்னியாப் பொருத்த விளக்கமும்—
# —அங்காரகப் பொருத்தமும்.

## காப்பு.

"செவ்வி திகழ்பொகுட்டுச் செந்தாமரை வதனக்
கொவ்வையெழிற் செவ்வாய் குறத்திதனை—நவ்வி
விழியானை யைப்புணரும் வேளைமத வெள்ளம்
பொழியானை யையமனமே போற்று."

## சோதிடனிலக்கணம்.

உண்மை பொறுமை அமைதி கொடை ஜீவகாருண்யம் கடவுள் வழிபாடு என்னும் நற்குணங்கள் யாவும் நிறைந்தவனாய் வேதங்களுக்கு நேத்திர ஸ்தானமாகிய முகூர்த்தம்-ஓரை-கணனம் என்பன கூறும் சோதிட நூல்களையும் பிறநூல்களையும் ஐயந்திரிபற அறிந்தவனாய் உள்ளா னொருவனே உலகிடை உண்மைச் சோதிடனென உரையாடற் குரியனென்ப.

பீடிகை:—உயரிய சாஸ்திரங்கள் யாவற்றுள்ளும் மனித சமூக நல்வாழ்வை முன்னிட்டுச் சிறப்புடைச் செயலெனக் கூறப்பெறுவது விவாக மொன்றே யாகலான் முதற்கண் அதற்கு அங்கங்களாய தின முதலாய தசவித பொருத்த விளக்கங்களைச் சொல்லுகின்றனன்.

அவை முறையே 1. தினப்பொருத்தம், 2. கணப்பொருத்தம், 3. மாகேந்திரப் பொருத்தம், 4. ஸ்திரீதீர்க்கப் பொருத்தம், 5. யோனிப் பொருத்தம், 6. இராசிப் பொருத்தம், 7. இராசி அதிபதிப் பொருத்தம், 8. வசியப் பொருத்தம், 9. இரஜ்ஜுப் பொருத்தம்,

10. வேதைப் பொருத்தம் என்னும் பத்துப் பொருத்தங்களே யாகும்.

## 1. ஆவது:—தினப்பொருத்தம்.

இந்தப் பொருத்தம் இலட்சுமி கடாக்ஷத்தைத் தருவது. ஸ்திரீயின் ஜன்ம நட்சத்திரம் முதல் புருஷன் ஜன்ம நட்சத்திரம் வரையில் 1, 2, 3, 4, 5, 6, 7, 8, 9 வரை எண்ணக் கீழ்க்காணுமாறு தினப்பொருத்தம் ஏற்படும் என்ப.

இவைகளில் 1-க்கு ஜன்மம், 2-க்குச் சம்பத்து, 3-க்கு விபத்து, 4-க்கு க்ஷேமம், 5-க்குப் பிரத்யரம், 6-க்குச் சாதகம், 7-க்கு வதம்†, 8-க்கு மைத்திரம், 9-க்குப் பரமமைத்திரம் எனப் பெயர்.

இவ்விதமே திரும்பவும் இருமுறை எண்ணவேண்டும். அவ்வாறு எண்ணிக்கை செய்யப் பெற்றவைகளுள் முதல் 9-ம் முதற் பரியாய மெனவும், 2-ஆம் ஒன்பதும் இரண்டாம் பரியாயமெனவும், 3-ஆம் ஒன்பதும் மூன்றும் பரியாயமெனவும் பெயர் பெறும்.

முதற் பரியாயத்தில் விபத்து–பிரத்யரம்-வதை இவைகளும், இரண்டாம் பரியாயத்தில் அவ்வவற்றின் அம்சங்கள் நீங்கலாக மற்றவைகளும், மூன்றும் பரியாயத்தில் மேற்கண்டுள்ள முழுவதும் சுபம்.

மூன்று பரியாயங்களாக எண்ணுவதில் முதல் பரியாயத்து 2-4-6–8-9-ஆம் நாட்கள் உத்தம மெனவும், இரண்டாம் பரியாயத்து 8-ஆம் நாள் ஒழித்து மற்றைய நாட்கள் உத்தம மெனவும், மூன்றும் பரியாயத்து 4-9-ஆம் நாட்கள் ஒழிய ஏனைய நாட்கள் சுபந் தருவன வெனவும் கண்டுகொள்க.

விசேஷித்து ஸ்திரீயின் நாள் முதல் புருஷனது நாள் வரையில் எண்ணும்போது முதல் 9-ல் 3-5–7-ஆம் நாட்களும், ஜன்மத்திர

† ஸ்திரீ நட்சத்திரத்திற்கு 7-ஆம் நட்சத்திரம் புருஷ நட்சத்திரமானால் வதமாம்.

யங்களும், சந்திராஷ்டமமான நட்சத்திரங்களும், இருபத்தேழாம் நாளும்.

இரண்டாம் பரியாயத்தில் 3-ஆம் நாளான பன்னிரண்டாம் நாளும், 5-ஆம் நாளான பதினுன்காம் நாளும், 88-ஆம் காலான வைநாசிகமும் † நீக்கப்படவேண்டும். 27-ஆம் நட்சத்திரம் ஏகராசியாயின் மிகுந்த சுபத்தையும், வேறு ராசியாயின் அசுபத்தையும் தருமென்பதில் ஐயமின்று. எனினும் அசுவினிக்கும் ரேவதிக்கும் பின்னராசி தோஷந்தராது.

தம்பதிகளின் நட்சத்திரங்கள் கார்த்திகை—ஆயில்யங்களானால் சந்தோஷ மென்பதே மருந்துக்கும் கிடையாது. சதா சஞ்சல சித்தராய் ஒருவரை யொருவர் நேசியாது பிரிந்து பட்டொழிந்து போவர். ஒற்றுமையின் றென்ப.

ஆயில்லியமும்—சுவாதியு மாயின் மேற்கண்ட பலாபலன்களே யுண்டாகும்.

சித்திரை—பூராடங்களாயின் மேற்கண்ட பலன்களே சித்திக்கும்.

அநுஷ—அவிட்டங்களும் அவ்வாறே.

அன்றியும் அவிட்டம்—பரணி, சதயம்—கார்த்திகை ஆகிய இவையும் அப்பலன் தருவனவே யாகலின் எக்காரணங் கொண்டும் ஜதை சேர்க்கொணு தென்ப பெரியார்.

உத்திரம்—திருவாதிரை இவை வதூவரர்களுக்குச் சுகந்தருனவ வென்ப.

அன்றியும், பூரம்—அநுஷம், சித்திரை—பூசம் இவையும் நல்லனவே.

---

† புருஷ நட்சத்திரத்திற்கு 22-ஆம் நட்சத்திரம். ஸ்திரீ நட்சத்திரமானுல் வைநாசிகமாம். இது காசியபரால் சொல்லப்பெற்றது. ஸ்திரீ நட்சத்திரமும் புருஷ நட்சத்திரமும் ஒன்றற் கொன்று 7-22 ஆக இருப்பதே அஃதென்ப.

புநர்பூசம்—ஹஸ்தம் இவை வமிச விருத்தியை உண்டாக்கும்.

கேட்டை—சதயம் இவை வமிச நாசத்தைத்தரும்.

உரோகணி—மகம் இவை புத்திராபி விருத்தியைத் தரும். அல்லாமலும்,

பூராட்டாதி—உரோகணியும் அப் பலனையே தரும். இவைகளுள் ஆணும் பெண்ணும் அடுக்கடுக்காகப் பிறக்கும். மிச்சமானவர்கள் ஆண்களாவர்.

அசுவிநி—புனர்பூசம் இவை கூட்டுறவாயின் பெரிதும் பெண் மக்களே ஜனிப்பார்கள்.

சுவாதி—உத்திராடமும் பொருந்தின் பெண் மக்கள் விருத்திக் களவில்லை.

இரேவதி—திருவாதிரை இவை சேரின் ஒருவருக் கொருவர் வைரிகளாவர். சதா சண்டை யுண்டாகும்.

கேட்டை—உத்திரம் கலந்தாலும் மேற்கண்ட தொந்தரையே உண்டாகும்.

விசாகம்—மகம் இவை துஷ்ட புத்திரர்களைப் பிறப்பிக்கும்.

அஸ்தமும்—மூலமும்; மிருகசிர—பூரமும் அவ்வாறாயின் மிகுந்த வைரம் தாரித்திரம் பெருநஷ்டம் முதலியன உண்டாகும்.

அசுவிநி—திருவோணம் கொள்ளுவார் ஒருவரை யொருவர் பிரிந்து எவ்வித சம்பந்தமு மில்லாதிருப்பர்.

உத்திரட்டாதி—மிருகசீரிடம் பொருத்தங் கொள்ளுவோரில் ஸ்திரீ வைதவ்வியத்தை யடைவாள்.

உத்திராடம்—ரேவதி இவை பொருத்த நட்சத்திரமாயின் மிகுந்த போக போக்கியங்களும் அதிக சம்பத்தும் உண்டாகும்.

மூலம்—பூராட்டாதி; பரணி, பூசம் இவை தெரிந்து கொள்ளப் படின் தம்பதிகள் அன்பு செல்வம் சௌபாக்கியம் கீர்த்தி முதலியன உடையராவர்.

விசாகம்—திருவோணம் இவை சக்களத்திப் போராட்டத்தை யுண்டுபண்ணும்.

பூராடம்—உத்திரட்டாதி இவை மனவொற்றுமையையும் பெருநேசத்தையும் உண்டுபண்ணும்.

வதூ வர நட்சத்திரங்கள் ஒன்றாயிருப்பதில் உரோகணி திருவாதிரை மகம் விசாகம் ஹஸ்தம் திருவோணம் இரேவதி உத்திரட்டாதி இவை ஏக நட்சத்திரங்களாயின் சுபந்தருமென்ப. எனவே இவை விவாகம் செய்ய உத்தமமானவை.

பரணி ஆயில்லியம் சுவாதி கேட்டை மூலம் சதயம் அவிட்டம் பூரட்டாதி இவை அவ்வாறாயின் வர்ஜ்ஜிக்க வேண்டுமென்ப.

பூரம் உத்திரம் பூசம் சித்திரை புனர்பூசம் அசுவினி கார்த்திகை உத்திராடம் பூராடம் மிருகசீரிடம் அநுடம் இந்த நட்சத்திரங்கள் சதிபதி நட்சத்திரங்களாயின் மத்தியம பலனைத்தரும்.

ஸ்திரீ புருஷ நட்சத்திரங்கள் ஒன்றாய் இரண்டு ராசிகளிலிருப்பின் முற்பாகம் புருஷனுடையதாகவும், பிற்பாகம் ஸ்திரீயினுடையதாகவும் இருத்தல் வேண்டும். இதற்கு மாறாயின் நாசமுண்டென்ப.

ஸ்திரீ புருஷ நட்சத்திரங்கள் இரண்டும் ஒருராசியிலிருந்தால் முதல் நட்சத்திரம் புருஷனுடையதாயிருத்தல் வேண்டும், ஸ்திரீயினுடைய நட்சத்திரமாயிருப்பின் கேடுண்டாகும்.

ஸ்திரீ புருஷ நட்சத்திரங்கள் ஒரிராசியில் வருங்கால் பரணி கார்த்திகையும், அவிட்டம் சதயமும், பூசம் ஆயில்யமும் வரலாகா. அவ்வாறு வரினும் அவைகளுள் புருஷனுடைய நட்சத்திரம் முதல் நட்சத்திரமாயிருப்பினும் ஆகாது.

ஒரிராசியில் சதயம் ஹஸ்தம் சுவாதி அசுவினி கார்த்திகை பூராடம் மிருகசீரிடம் மகம் இவைகளுளொன்று ஸ்திரீ நட்சத்திரமாகவும் இவற்றின் பின்னுள்ளன புருஷ நட்சத்திரமாகவும் வரின் சுபந்தருமென்ப.

ஏக பாத நட்சத்திரம் சதியினுடையதாகவும் திரிபாத நட்சத்திரம் பதியினுடையதாகவும் இருத்தல் வேண்டும். பாதங்கள் சமமுள்ளவையாயின் முதற்பாகம் புருஷனுடையதாகவும் பிற்பாகம் ஸ்திரீயினுடையதாகவும் இருத்தல் நன்று.

சுவாதி மிருகசீரிடம் மகம் அநுஷம் இந்நான்கனுள் புருஷநட்சத்திரங் கூடினும் ஸ்திரீ நட்சத்திரங் கூடினும் விவாகம் செய்யலாம். ஏனைய பொருத்தங்கள் எட்டுமேயில்லா விடினும் விவாகம் செய்விக்கலா மென்பது பெரியோர் துணிபு.

மூலா நட்சத்திரத்து முதற்பாதப் பெண்ணைத் தகப்பன் இருக்கும் ஆண்பிள்ளையும், ஆயில்லிய நட்சத்திரத்து முதலாவது பாதப் பெண்ணைத் தாயார் இருக்கிற ஆண் பிள்ளையும், கேட்டை முதற் பாதப் பெண்ணைத் தமயன் இருக்கிற ஆண்பிள்ளையும், விசாகம் நான்காவது பாதப் பெண்ணைத் தம்பியுடன் கூடின ஆண்பிள்ளையும் விவாகம் செய்துகொள்ளக் கூடாது செய்துகொண்டால் அவரவர்களுக்குத் தோஷமுண்டாகும்.

## 2-ஆவது :—கணப்பொருத்தம்.

அசுவினி, மிருகசீரிஷம், புனர்பூசம், பூசம், அஸ்தம், சுவாதி, அநுஷம், திருவோணம், ரேவதி இவ்வொன்பது நட்சத்திரங்களும் தேவ கணமாம்.

பரணி, உரோகணி, திருவாதிரை, பூரம், உத்திரம், பூராடம், உத்திராடம், பூரட்டாதி, உத்திரட்டாதி இவ்வொன்பது நட்சத்திரங்களும் மனுஷ்ய கணமாம்.

கார்த்திகை, ஆயில்லியம், மகம், சித்திரை, விசாகம், கேட்டை மூலம், அவிட்டம், சதயம் இவ்வொனபது நட்சத்திரங்களும் இராட்சத கணமாம்.

மணமக்கள் உடுக்கள் ஒரே கணமாய் வரின் உத்தம மென்ப.

அவை தேவகணமும் மானுஷ்ய கணமுமாயின் மத்தியமம். தேவ ராக்ஷஸமாயின் அதமம். மானுஷ்ய ராக்ஷஸமாயின் மரணமுண்டாம். இதுவுமன்றி,

ஸ்திரீ ராக்ஷஸமும் புருஷன் மானுஷ்யமுமாயினும் அவ்வாறே யென்க.

புருஷன் இராட்சத கணத்தனும் பெண் மானுஷ்ய கணத்தளாயும் இருப்பின் தோஷந் தராதெனப் பெரியார் கூறுப. இஃதேயுமன்றி,

புருஷ நட்சத்திரத்திற்கு 14 நட்சத்திரங்கள் மேற்பட்டதாய் ஸ்திரீ நட்சத்திரம் கணக்கிடப்படின் ஸ்திரீ ராக்ஷஸ கணத்தளாயினும் குற்றமில்லை யெனக் கூறுப பெரியார்.

பெண் ராக்ஷஸ கணத்தளாயினும் அன்னாள் நட்சத்திரத்துக்குப் புருஷ நட்சத்திரம் 24-க்கு மேல் கணக்கிடப்படினும் தோஷ மின்றென்ப.

## 3-ஆவது :—மாகேந்திரப் பொருத்தம்.

மணமகள் நட்சத்திரம் முதற்கொண்டு மணமகன் நட்சத்திரம் வரை எண்ணிக்கை செய்ய 4-7-10-13-16-19-22-25 ஆக வரின் அவை மகா மங்களந்தரும் மாகேந்திரப் பொருத்தம் எனப் பெறும்.

## 4-ஆவது:—ஸ்திரீ தீர்க்கப் பொருத்தம்.

ஸ்திரீ நட்சத்திரந் தொடங்கி புருஷ நக்ஷத்திரம் வரையில் எண்ண அவ்வெண்ணிக்கை 13 நட்சத்திரத்திற்கு மேற்படின் ஸ்திரீ தீர்க்க மெனக் கூறுப.

சிலர் 7 நட்சத்திரத்திற்கு மேற்படினும் ஸ்திரீ தீர்க்கம் உண்டென மொழிப.

## 5-ஆவது:—யோனிப் பொருத்தம்.

| | | | |
|---|---|---|---|
| 1 | அசுவினி = குதிரை | 6 | திருவாதிரை = நாய் |
| 2 | பரணி = யானை | 7 | புனர்பூசம் = பூனை |
| 3 | கார்த்திகை = ஆடு | 8 | பூசம் = ஆடு |
| 4 | உரோகணி = சர்ப்பம் | 9 | ஆயில்லியம் = பூனை |
| 5 | மிருகசீரிடம் = சர்ப்பம் | 10 | மகம = எலி |

| | | | |
|---|---|---|---|
| 11 | பூரம்=எலி | 20 | பூராடம்=குரங்கு |
| 12 | உத்திரம்=பசு | 21 | † உத்திராடம்=பசு |
| 13 | அஸ்தம்=எருமை | 22 | திருவோணம்=குரங்கு |
| 14 | சித்திரை=புலி | 23 | அவிட்டம்=சிங்கம் |
| 15 | சுவாதி=எருமை | 24 | சதயம்=குதிரை |
| 16 | விசாகம்=புலி | 25 | பூரட்டாதி=சிங்கம் |
| 17 | அநுஷம்=மான் | 26 | உத்திரட்டாதி=பசு |
| 18 | கேட்டை=மான் | 27 | ரேவதி=யானை |
| 19 | மூலம்=நாய் | | † உத்திராடத்தினை கீரி என்பாருமுளர். |

விரோதஜாதிகளான ஜந்துக்களுக் கேற்ப மணமக்கள் நட்சத்திரங்கள் ஏற்படின் ஜதை சேர்க்கொண்ணாது. ஒரே வகை யோனியாயின் உத்தமம். வேறு வகையாயின் மத்தியமம்

யானை சிங்கம்; எருமை குதிரை; குரங்கு ஆடு; நாய் மான்; பாம்பு கீரி; பசு புலி; எலி பூனை; எலி பாம்பு; இவை ஒன்றற்கொன்று விரோத ஜந்துக்களாகலின் இவ்வகைப் பொருத்தங்கள் நீக்கற் பாலனவே.

## 6-ஆவது:—† இராசிப் பொருத்தம்.

பெண் இராசிக்கு ஆண் இராசி 2 ஆவதாகவும் ஆணிராசிக்குப் பெண்ணிராசி 12 ஆவதாகவும் இருப்பின் மரண முண்டென்ப.

ஆணிராசிக்குப் பெண்ணிராசி இரண்டாவதாகவும் பெண்ணிராசிக்கு ஆணிராசி பன்னிரண்டாவதாகவும் இருந்தால் ஆயுசு அதிகமாகும்.

ஸ்திரீ ராசிக்குப் புருஷ விராசி 3 ஆவதாகவும் புருஷ விராசிக்கு ஸ்திரீராசி 11 ஆவதாகவும் இருப்பின் துக்க முண்டாகும்.

---

† சந்திரன் ஜனன காலத்தில் எந்த விராசியி லிருக்கின்றாரோ அதுவே இராசி யென்ப. இவ்விதமே இரு பாலார்க்குங் காண்க.

புருஷ விராசிக்கு ஸ்திரீ ராசி மூன்றாவதாகவும் ஸ்திரீ ராசிக்குப் புருஷ விராசி பதினொன்றாவதாகவும் இருந்தால் மிகுந்த சுகமுண்டாகும்.

ஸ்திரீ ராசிக்குப் புருஷவிராசி 4 ஆவதாகவும் புருஷ விராசிக்கு ஸ்திரீ ராசி 10 ஆவதாகவும் இருந்தால் மிகுந்த தாரித்திரம் உண்டாகும்.

புருஷ விராசிக்கு ஸ்திரீ ராசி நான்காவதாகவும் ஸ்திரீ ராசிக்குப் புருஷ விராசி பத்தாவதாகவும் இருந்தால் திரண்ட பொருள் உண்டாகும்.

ஸ்திரீ ராசிக்குப் புருஷ விராசி 5 ஆவதாகவும் புருஷ விராசிக்கு ஸ்திரீ ராசி 9 ஆவதாகவும் இருந்தால் வைதவ்ய முண்டாகும்.

புருஷ விராசிக்கு ஸ்திரீ ராசி ஐந்தாவதாகவும் ஸ்திரீ ராசிக்குப் புருஷ விராசி ஒன்பதாவதாகவும் இருந்தால் சுமங்கலியாய் இருப்பாள்.

ஸ்திரீ ராசிக்குப் புருஷ விராசியானது 6 ஆவதாகவும் புருஷ விராசிக்கு ஸ்திரீ ராசி 8 ஆவதாகவும் இருந்தால் புத்திரர்களுக்குக் கெடுதல் உண்டாகும்.

புருஷ விராசிக்கு ஸ்திரீ ராசி ஆறாவதாகவும் ஸ்திரீ ராசிக்குப் புருஷ விராசி எட்டாவதாகவும் இருந்தால் புத்திரர்கள் விருத்தியுண்டு.

ஸ்திரீ ராசிக்குப் புருஷவிராசி ஏழாம் இராசியாயிருப்பின் சர்வ மங்களமும் தீர்க்காயுளுமுண்டு. ஸ்திரீராசி முதலாக மீனம் மேஷம் விருஷபம் மிதுனம் கடகம் சிங்கம் கன்னி துலாம் விருச்சிகம் தநுசு மகரம் கும்பம் ஆம் இவ்வடைவிலே 2-ம் 12-ம் ஆனால் தோஷமில்லை. மேஷாதியாய் மீன பரியந்தம் இவ்விராசிகளில் 2-ம் 12-ம் ஆனால் தோஷமுண்டு.

மேஷத்திற்கும் சிங்கத்திற்கும், கடக விருச்சிகங்களுக்கும், 5.9, ஆம் இராசிகளாக வரின் தோஷமில்லை.

கும்பத்திற்கும் சிங்கத்திற்கும், கடகத்திற்கும் மகரத்திற்கும் சமசப்தகமாயின் தோஷமுண்டு. எனவே ஒன்று படுத்தலாகாது.

மேஷத்தோடு கன்னிக்கும், தநுசோடு விருஷபத்திற்கும், துலாத்தோடு மீனத்திற்கும், கும்பத்தோடு கடகத்திற்கும், சிங்கத்தோடு மகரத்திற்கும், மிதுனத்தோடு விருச்சிகத்திற்கும் சஷ்டாஷ்டம தோஷமில்லை.

## 7-ஆவது:—இராசியதிபதிப் பொருத்தம்.

| | |
|---|---|
| மேஷத்திற்கும் விருச்சிகத்திற்கும் அதிபதி | செவ்வாய் |
| விருஷபத்திற்கும் துலாத்திற்கும் அதிபதி | சுக்கிரன் |
| மிதுனத்திற்கும் கன்னிக்கும் அதிபதி | புதன் |
| கடகத்திற்கு அதிபதி | சந்திரன் |
| சிங்கத்திற்கு அதிபதி | சூரியன் |
| தநுசிற்கும் மீனத்திற்கும் அதிபதி | குரு |
| மகரத்திற்கும் கும்பத்திற்கும் அதிபதி | சனி |

### சத்துரு மித்துரு.

செவ்வாய்க்கு: சுக்கிரனும் புதனும் மித்துருக்கள். மற்றவர் சத்துருக்கள்.

சுக்கிரனுக்கு: சூரியன் சந்திரன் சத்துருக்கள். மற்றவர் மித்துருக்கள்.

புதனுக்கு:—சூரியன் சத்துரு. மற்றவர்கள் மித்துருக்கள்.

சந்திரனுக்கு:—புதன் குரு மித்துருக்கள். மற்றவர் சத்துருக்கள்.

சூரியனுக்கு:—குரு ஒருவனே மித்திரன். மற்றவர் சத்துருக்கள்.

குருவிற்கு:—செவ்வாய் ஒருவனே சத்துரு. மற்றவர் மித்துருக்கள்.

சனிக்கு:—குரு ஒருவனே சத்துரு. மற்றவர் மித்துருக்கள்.

## † சத்துரு மித்துரு சமன்.

| | | |
|---|---|---|
| செவ்வாய்க்குச் | சனி சுக்கிரன் | சத்துரு |
| ,, ,, ,, | சூரியன் சந்திரன் குரு | மித்துரு |
| ,, ,, ,, | புதன் | சமன் |
| சுக்கிரனுக்குச் ... | சூரியன் சந்திரன் | சத்துரு |
| ,, ,, ,, | புதன் சனி | மித்துரு |
| ,, ,, ,, | செவ்வாய் குரு | சமன் |
| புதனுக்குச் ... | சந்திரன் | சத்துரு |
| ,, ,, ,, | சூரியன் சுக்கிரன் | மித்துரு |
| ,, ,, ,, | குரு செவ்வாய் சனி | சமன் |
| சந்திரனுக்குச் | சத்துருக்களே | இல்லை |
| ,, ,, ,, | சூரியன் புதன் | மித்துரு |
| ,, ,, ,, | குருசுக்கிரன்செவ்வாய்சனி | சமன் |
| சூரியனுக்குச் ... | சனி சுக்கிரன் | சத்துரு |
| ,, ,, ,, | சந்திரன் செவ்வாய் குரு | மித்துரு |
| ,, ,, ,, | புதன் | சமன் |

| | | | |
|---|---|---|---|
| குருவிற்குச் | ... | சுக்கிரன் புதன் | சத்துரு |
| ,, | ,, ,, | சூரியன்சந்திரன்செவ்வாய் | சத்துரு† |
| ,, | ,, ,, | சனி | சமன் |
| சனிக்குச் | ... | சூரியன்சந்திரன்செவ்வாய் | சத்துரு |
| ,, | ,, ,, | சுக்கிரன் புதன் | மித்துரு |
| ,, | ,, ,, | குரு | சமன் |

† இஃதொருவர் மதம்.

ஸ்திரீ புருஷர்களின் இராசியதிபர் ஒருவரே வரினும் அவ்விரு வரும் மித்திரராய் வரினும் உத்தமமென்ப. சமனுயிருந்தால் மத்தி யமம். சத்துருக்களாயின் இராசி யதிபதிப் பொருத்தமே யில்லை.

குறிப்பு:—இராசியதிபர் ஸ்திரீ ஜாதகத்திற் கண்டபடியே புருஷ ஜாதகத்திற்கும் வருவாயினும் (ஸ்திரீ அங்காரகன், புரு ஷன் அங்காரகன்) அல்லது அவ்வதிபர்கள் மைத்திரமாளுலும் சம சப்தகமென்ற 7 க்கு 7 ஆக வரினும் கணத்தினுல் ஏற்படும் தோஷ மும், இராசியினு லேற்படும் தோஷமும், ரஜ்ஜு என்னும் தாலிப் பொருத்தத்தினுல் ஏற்படும் தோஷமும் (தாலிப் பொருததம் இல்லா விட்டாலும்) வேதையினுலேற்படும் தோஷமும் அறவே கிடையா தென்ப அறிந்த நல்லோர். எவ்வித வில்லங்கமும் இல்லையாகலின் விவாகம் செய்விக்கலா மெனக.

## 8-ஆவது:—வசியப் பொருத்தம்.

மேஷத்திற்கு: விருச்சிகமும் சிங்கமும்; விருஷபத்திற்கு: கடகமும் துலாமும்; மிதுனத்திற்குக்; கன்னியும்; கடகத்திற்கு: விருச்சிகமும் தநுசும்; சிங்கத்திற்குத்: துலாமும்; கன்னிக்கு மிதுன மும் மீனமும்; துலாத்திற்கு: மகரமும்; விருச்சிகத்திற்கு: கன்னி

யும் கடகமும்; தநுசிற்கு மீனமும்; மகரத்திற்கு: மேஷமும் கும்பமும் கும்பத்திற்கு, மேஷமும்; மீனத்திற்கு: மகரமும் வசிய விராசிகளென்ப.

ஸ்திரீ ராசிக்குப் புருஷ விராசி வசியமாகில் வசியப் பொருத்தமுண்டு. வித்தியாச மாயின் பொருத்தமில்லை.

## 9-ஆவது:—இரஜ்ஜுப் (தாலிப்) பொருத்தம்.

அசுவினி மகம் மூலம் இவை ஆரோக பாதரஜ்ஜு
ஆயில்லியம் கேட்டை ரேவதி இவை அவரோக பாதரஜ்ஜு
பரணி பூரம் பூராடம் இவை ஆரோக ஊருரஜ்ஜு
பூசம் அநுஷம் உத்திரட்டாதி இவை அவரோக ஊருரஜ்ஜு
கார்த்திகை உத்திரம் உத்திராடம் இவை ஆரோக நாபிரஜ்ஜு
புனர்பூசம் விசாகம் பூரட்டாதி இவை அவரோக நாபிரஜ்ஜு
உரோகணி அஸ்தம் திருவோணம் இவை ஆரோக கண்டரஜ்ஜு
திருவாதிரை சுவாதி சதயம் இவை அவரோக கண்டரஜ்ஜு
மிருகசிரம் சித்திரை அவிட்டம் இவை சிரோரஜ்ஜு

ஸ்திரீபுருஷ நட்சத்திரங்கள் ஏக ரஜ்ஜுவிலே சேர்ந்திருப்பின் ரஜ்ஜுப் பொருத்தமில்லை. ஏகரேகையில் விழாமல் இரண்டும் ஆரோக ரஜ்ஜுவானால் உத்தமோத்தமமென்ப. இவ்வாறின்றி இரண்டும் அவரோக ரஜ்ஜுவானால் ஸ்திரீ நாசமுறுவள். ஒன்றற்கொன்று மாறுற்று ஆரோக அவரோக ரஜ்ஜுக்களாயினும் சுபத்தையே தருமென்ப.

ஸ்திரீ புருஷ நட்சத்திரங்கள் சிரோரஜ்ஜுவானால் புருஷனுக்கு மரணமுண்டு. கண்டரஜ்ஜுவாயின் ஸ்திரீநாசமும், நாபி ரஜ்ஜுவாயின் சந்ததி நாசமும், ஊரு ரஜ்ஜுவாயின் திரவிய நஷ்டமும், பாதரஜ்ஜுவாயின் வாசஸ்தானத்திற்குக் கெடுதலும் யாத்திரையும் உண்டாகுமென்ப. ஆகையால் ஏகரஜ்ஜுவான சந்தியில் விவாகம் செய்விக்கவே கூடாது எனச்சிலர் கூறுவர்

தினம், மாகேந்திரம், இராசி, இராசியதிபர் மித்திரம், ஆகிய பொருத்தங்கள் இருப்பின் ஏகரஜ்ஜு தோஷம் நிவிர்த்தியாதலால் (ஒன்று ஆரோகணத்திலும் ஒன்று அவரோகணத்திலும் ஏகரஜ்ஜுவில் இருப்பது) விவாகம் செய்விக்கலா மென்று சில நூலாசிரியர்கள் கூறுப.

## 10. ஆவது:—வேதைப் பொருத்தம்.

பெண் ஆண் உடுக்கள் அசுவினி கேட்டை; பரணி அநுஷம்; கார்த்திகை விசாகம்; உரோகணி சுவாதி; மகம் ரேவதி; பூரம் உத்திரட்டாதி; உத்திரம் பூரட்டாதி; அஸ்தம் சதயம்; மூலம் ஆயில்லியம்; பூராடம் பூசம்; உத்திராடம் புனர்பூசம்; திருவோணம் திருவாதிரையு மானால் அவ் விருவர்களும் ஒருவருக்கொருவர் வேதை தோஷத்திற் குள்ளாவார்கள். இத் தோஷம் நாசந்தரும். அன்றியும் மிருகசீரிடம் சித்திரை அவிட்டம் இவை ஒன்றற்கொன்று தீரா வேதை தோஷத்திற் குரியனவாகலின் பொருந்தாதெனவே புகன்றிடுக.

## நாடிப் பொருத்தம்.

பெண் ஆண் நட்சத்திரங்கள் அசுவினி—திருவாதிரை—புனர்பூசம்—உத்திரம்—அஸ்தம்—கேட்டை—மூலம்—சதயம்—பூரட்டாதி ஆகிய இவைகளு ளொன்றுனால் அவை இடப் பார்சுவநாடி யெனப் பெயர் பெறும்.

பரணி-மிருகசீரிஷம்-பூசம் பூரம்-சித்திரை-அநுஷம்-பூராடம்-அவிட்டம்-உத்திரட்டாதி இவை அவ்வாறாயின் மத்தியம நாடி யெனப் பெயர் பெறும்.

கார்த்திகை-உரோகணி—ஆயில்லியம்-மகம்-சுவாதி-விசாகம்-உத்திராடம்-திருவோணம்—ரேவதி இவைகளி லொன்றுனால் அவை வலப் பார்சுவ நாடி யெனப் பெயர் பெறும்.

இவைகளுள் ஸ்திரீ புருஷ நட்சத்திரங்கள் ஏக நாடியாய்த் தோன்றுவதோடு நில்லாமல் மத்தியம நாடியுமாயின் புருஷனுக்குத் தோஷ முண்டுபண்ணும். பார்சுவ நாடியாயின் ஸ்திரீக்குத் தோஷ முண்டாகும். ஏக நாடியாயின் அது நாடிப் பொருத்தத்திற் குரித்தான தன்றாகவின் விடற்பாலதென்றே விளம்புக.

அவ்வாறு ஏக நாடியாக வந்த இராசி ரஜ்ஜு முதலியன பொருந்தி உத்தமமாயினும் இருவர் ஜன்ம ராசி யதிபர் மித்திர ராஞலும் ஏக கிரகமா யிருந்தாலும் ஏக நாடி தோஷத்திற் கிலக்காகா தென்க.

விசாகம்-சுவாதி-ரேவதி இவைகளுக்கு வலப்பார்சுவ நாடி தோஷமே யில்லை.

அவிட்டம் அநுஷம் இவைகளுக்கு மத்திய நாடி தோஷமில்லை.

திருவாதிரை அஸ்தம் பூரட்டாதி முதலியவைகளுக்கு இடப் பார்சுவ நாடி தோஷமில்லை யென்ப.

தம்பதிகளின் ஜன்ம நட்சத்திரங்கள் ஏக நட்சத்திரங்களாஞலும் சமான பாதங்களை யடைந்தாலும் சுபத்தையே செய்வர்.

இருவர் நாடிகளும் பரணி மிருகசிரிடம் பூசம் பூராடம் உத்திரட்டாதி ஆதிய மத்திய நாடிகளாயிருந்தாலும் ஏக பாதமில்லாமல் பின்ன பாதத்தை யடைந்திருக்குமாஞல் சுபத்தையே தருமாதலின் பொருத்தத்திற் குரித்தானதென்று புகல்வர் புலவர்.

இப் பொருத்தங்களில் தினப் பொருத்தங் கூடின் ஆயுராரோக்கிய லட்சுமி கடாக்ஷங்களும், கணப் பொருத்தங் கூடின் மங்களகரப் பிரீதிகளும், மாகேந்திரப் பொருத்தங் கூடின் ஐசுவரிய புத்திர விருத்திகளும், ஸ்திரீ தீர்க்கப் பொருத்தங்

கூடின் சகல சௌபாக்கிய சம்பத்துக்களும், யோனிப் பொருத்தங் கூடின் தம்பதிகளுள் சிநேகத்துவம் புத்திராபிவிருத்தி முதலியனவும், இராசிப் பொருத்தங் கூடின் வம்சாபி விருத்தியும், இராசி அதிபதிப் பொருத்தங் கூடின் பரம சிநேகத்தையும் தான்னிய விருத்தி வம்ச விருத்தி முதலியனவும், வசியப் பொருத்தங்கூடின் அந்யோன்ய சிநேகத்துவ வம்சாபி விருத்தியும், இரஜ்ஜுப் பொருத்தங் கூடின் மாங்கல்லிய விருத்தியும், வேதைப் பொருத்தங் கூடின் துக்கநாச இஷ்டப்பிராப்த பகுபுத்திரப் பேறும், நாடிப் பொருத்தங் கூடின் வம்சாபி விருத்தியும் உண்டாகு மென்ப.

மேலே சொல்லப்பட்ட பொருத்தங்களுள் பாதிப் பொருத்தங்களுக்கு மேல் பொருந்தியிருத்தல் உத்தமம்.

பிரதானமாக தினம் கணம் யோனி ராசி ரஜ்ஜு ஆகிய இவ்வைந்தும் பொருந்தி யிருத்தல் வேண்டும். இதனுள்ளும் தினமும் ரஜ்ஜுவும் கேதநிரத்தினும் முக்கியமென்ப.

பிராமணர்களுக்குத் தினப் பொருத்தமும், க்ஷத்திரியர்களுக்குக் கணப் பொருத்தமும், வைசியர்களுக்கு இராசிப் பொருத்தமும், சூத்திரர்களுக்கு யோனிப் பொருத்தமும், முக்கியமாயிருத்தல் வேண்டுமென்பதை மறத்தலொண்ணாது.

இப்பொருத்தங்களுள் ஐந்துக்குமேல் இருப்பின் விவாகம் செய்ய உத்தமமென்ப. சுபம். சுபம்.

ஓம் குமார குருப்யோ நம:

# கிரகப்பொருத்தம் என்னும்—

## —அங்காரகப் பொருத்தம்.

அங்காரகன், ஸ்திரீ ஜனன ஜாதக லக்கினத்திற்கு 2. 4. 7. 8. 12 ஆம் இடங்களில் இருப்பின் புருஷனுக்கு நாசமும், அவ்வாறே புருஷ ஜாதகத்தில் இருப்பின் ஸ்திரீக்கு நாசமும் உண்டாகுமென்ப.

அங்காரகன் இலக்கினம் சந்திரலக்கினம் சுக்கிரலக்கினம் இத்தானங்களுக்குத் துர்த்தானங்களான 6. 8. 12 ஆம் இடங்களு லொன்றில் இருப்பின் அன்னோன் தசாபுத்தி நடைபெறுங் காலங்களில் தோஷமுண்டா மெனப் பெரியார் கூறுப.

ஆண் பெண் இருவர்களுடைய ஜனன காலத்தில் அவ்விருவருக்கு முரிய இலக்கினம் சந்திரலக்கினம் சுக்கிரலக்கினம் ஆம் இவற்றிற்கு 2-4-7-8-12 ஆம் இடங்களில் அங்காரகன் இருப்பாராயின் தம்பதிகள் புத்திர மித்திர தன தான்னிய சம்பத்தும் புத்தியும் உள்ளவர்களாய் இருப்பார்கள். இவ்வாறு ஒருவர்க்கிருந்து வேறொருவர்க்கில்லாதிருக்குமாயின் அவ்வாறில்லாதார்க்கு மரணம் உண்டாகும் என்பது நிச்சயமென அறிவாளிகள் கூறுகின்றார்கள்.

அங்காரகன் ஜனன காலத்தில் மேஷம் கடகம் விருச்சிகம் மகரம் ஆம் இவ்விராசிகளு லொன்றில் இருந்து அவ்விடம் இலக்கினத்திற்கு 4-7-ஆம் இடமாயிருக்குமாயின் அவர், (அங்காரகன் தோஷத்தைத் தாரமல் சுபத்தையே தருவார் எனப் பெரியார் கூறுப,

அங்காரகன் இலக்கினத்திற்கு 4-8-12-2 ஆகிய இவ்விடங்களி லொன்றில் இருந்து அவ்விடங்கள் சாராசியா யிருப்பின் சகல தோஷமும் நீங்கிச் சுபமுண்டாகுமென்றும், அவ்விடங்கள் (4-8-12-2) மற்றைய இராசிகளாக (அஃதாவது ஸ்திர உபயம்) இருக்குமாயின் இராசியின் விசேஷத்தால் மிகுந்த தோஷம் உண்டாகும் என்பது முனிவராதி முன்னோர் கருத்து.

குறிப்பு:—இச்சுலோகத்தில் 7 ஆமிடத்தைப் பற்றிக் குறிப்பிடவேயில்லை.

அங்காரகன் இலக்கினம் சந்திரலக்கினம் சுக்கிரலக்கினம் ஆம் இவற்றிற்குச் சொல்லியுள்ள ஐந்து ஸ்தானங்களான 2-4-7-8-12 ஆகிய அவை தோஷமுள்ள தானங்களா யிருப்பினும் அந்தச் செவ்வாய், குரு புதன் இவர்களோடு சேர்ந்திருந்தாலும் அல்லது அவர்களுடைய பார்வையைப் பெற்றிருப்பினும் எவ்வித தோஷத்தையுஞ் செய்யாது சுபத்தையே செய்வர் என்ப.

அங்காரகன் ஜன்ம லக்கினத்திற்கு 2-4-7-8-12 ஆகிய தானங்களில் இருந்தால் மிகுந்த தோஷத்தைத் தருவர். இவ்வித ஜாதகர்களுக்கு அங்காரக தோஷமில்லாத ஜாதகரை மணம் புணர்த்தலாகாது. மேலே கூறிப்போந்த ஐந்து ஸ்தானங்களில் இருக்கும் அங்காரகனை, குருவேனும் புதனேனும் பார்த்தாலும் அல்லது குருவோடேனும் புதனோடேனும் சேர்ந்திருந்தாலும் எவ்வகைத் தோஷத்தையும் செய்யாமல் நன்மையையே செய்வரென்று கூறுப.

அங்காரகன் இலக்கின சந்திரலக்கின சுக்கிர லக்கினங்களுக்கு மிகுந்த தோஷந் தருபவராய்க் காணப்பட்டாலும், அவர் இராசியில் உச்ச க்ஷேத்திரத்திலேனும் நவாம்சத்தில் சுய க்ஷேத்திரத்திலேனும் இருப்பின் தோஷத்தை ஒருக்காலும் செய்யாரென்ப.

அங்காரகன் மிகுந்த தோஷந் தருபவராய்க் காணப்பட்டு அவருக்குக் குரு புதன் சுக்கிரன் சுக்கில பட்சத்துச் சந்திரன் இவர்க

ளுள் ஒருவரின் பார்வையுண்டாளுலும் அல்லது அவர்களுள் ஒரு வருடன் சேர்ந்தாலும் தோஷஞ் செய்யாரென்ப. எனவே அவர் தம்பதிகளுக்குச் சகல சௌபாக்கியங்களுந் தந்து தீர்க்காயுளுடன் வாழச் செய்வரென்பது போதரும்.

அங்காரகன் 2-4-7-8-12 ஆகிய இவ்விடங்கள் ஒன்றிலிருந்து தோஷமுடையாராய்க் காணப்பட்டாலும் இராசிச் சக்கரத்தில் அவர் உச்சஸ்தானத்தை யடைந்திருந்தாலும் இராகு கேது சனி இவர்களுள் ஒருவருடன் கூடியிருந்தாலும் இவர்களின் பார்வையைப் பெற்ருலும் அல்லது மித்திர க்ஷேத்திரத்தி லிருந்தாலும் தோஷர் தாரதென்பது பெரியோர்களின் அபிப்பிராயமாம்,

அங்காரகன் தோஷஸ்தானங்களிலிருந்தாலும் இராசியில் ஸ்வக்ஷேத்திரம், நவாம்சத்தில் ஸ்வநவாம்சம், இராசியில் உச்ச க்ஷேத்திரம், நவாம்சத்தில் உச்சாம்சம் முதலியவைகளில் இருந்தா லும் எக்காலத்தும் தோஷந்தராது நன்மையையே செய்வர்.

அங்காரகன் தோஷஸ்தானங்களில் இருந்து குரு சுக்கிரன் சந்திரன் இவர்களுள் எவர்களாலாவது பார்க்கப் பெற்ருலும் தோஷ மில்லை யென்க. அவ்வாறிருக்கும் அவர் தம்பதிகளுக்கு ஆயுரா ரோக்கிய சம்பத்துக்களை அளிப்பர்.

அங்காரகன் இலக்கினம் சந்திரலக்கினம் சுக்கிரலக்கினம் முதலியவற்றிற்கு மிகுந்த தோஷமுள்ளவராய்க் காணப்பட்டாலும், அவர் உச்சம் ஸ்வக்ஷேத்திரம் ஸ்வநவாம்சம் இவைகளிலிருந்தால் தோஷம் செய்யாமல் நன்மையையே செய்வார்.

சந்திர சூரிய விராசிகளான கடக சிம்ம லக்கினங்களில் ஜனன மான ஜாதகர்களுக்கு அங்காரகன் எவ்வித தோஷத்தையுஞ் செய்யா ரென்க.

அங்காரகன் இருக்கும் இராசிநாதன் அவர் இருக்கும் இராசிக்கு 1-4-7-10-5-9 ஆம் இடங்களில் இருந்தால் தோஷம் இல்லையென்றே கூறிடுக. இலக்கினத்தைக் கொண்டே அங்காரகதோஷம் கற்பிக்கவேண்டும் எனப் பெரியார் கூறுப.

அங்காரகன் 4-8-ஆமிடங்களிலிருந்து சுபர்களின் திருஷ்டியைப் பெற்றிருப்பின் எவ்வித தோஷத்தையும் தருவதில்லை.

ஸ்திர இராசிகளான சிம்ம விருச்சிகங்களையடைந்த அங்காரகனும், சரவிராசிகளான மேட மகரங்களை யடைந்த அங்காரகனும் எத்தகைத் தோஷங்களையும் செய்வதில்லை யென்பது பெரியோர் துணிபு. எனவே இவ்விராசிகளிலிருக்கும் அங்காரகன் தம்பதிகளுக்கு சர்வாபீஷ்ட சம்பத்துக்களைத் தருவர் என்ப.

அங்காரகன் ஜனன காலத்து லக்கின சந்திர லக்கின சுக்கிர லக்னங்களுக்கு 2-4 7-8-12-இவைகளுள் ஒன்றில் இருந்தால் தோஷம். இவ்விதமே ஸ்திரீ ஜாதகத்தையும் கவனிக்க வேண்டும். இருவருக்கும் தோஷமிருப்பின் புத்திராதி சகல சந்தோஷ சம்பத்துகளும் உண்டாம். நாயகனுக்கிருந்து நாயகிக்கில்லாவிட்டால் பெண்ணுக்குத் தோஷமுண்டாகும். நாயகிக்கிருந்து நாயகனுக்கில்லாவிட்டால் ஆணுக்குத் தோஷமுண்டாம். இருவருக்கும் தோஷமில்லா திருப்பின் எல்லாச் செல்வமும் உண்டாகும்.

அங்காரகன் சுயக்ஷேத்திரம் சுய நவாம்சங்களிலிருந்தாலும், அவர், குரு சுக்கிரன் சந்திரன் புதன் இவர்களுள் எவரோடாவது சேர்ந்திருந்தாலும், அல்லது இவர்களுள் எவரது திருஷ்டியைப் பெற்றிருந்தாலும் தோஷத்தைத் தராமல் சகல செல்வங்களையும் தந்து வாழச் செய்வர்.

அங்காரகன் புருஷ ஜாதகத்தில் 2-12-4-7-8- ஆகிய இவ்விடங்களி லொன்றில் இருப்பின் ஸ்திரீக்கு மரண முண்டாகும்.

இவ்விதமே பெண் ஜாதகத்தில் இருப்பின் ஆணுக்கு மரண முண்டாகும்.

அங்காரகன் பெண் ஜாதகத்தில் 4-12 ஆமிடங்களிலும், புருஷ ஜாதகத்தில் 2-7- ஆமிடங்களிலும் இருந்தால் தோஷ முண்டு அவர் 8. ஆமிடத்திலிருப்பாராகில் தம்பதிகளுக்கே தோஷமாம்.

அங்காரகன் ஸ்திரீ புருஷ ஜாதகங்களுக்கு மிதுன கன்னிகளில் இருந்து அவ்விராசிகள் (இலக்கினத்திற்கு) 2. ஆமிடமானால் தோஷந் தருவதில்லை.

அங்காரகன் இருதிற ஜாதகங்களுக்கும் விருஷப துலாம் முதலிய வற்றிலிருந்து அவ்விராசிகள் (இலக்கினத்திற்கு) 12 ஆமிடமானால் தோஷந்தருவதில்லை.

அங்காரகன் இருவருக்கும் மேட விருச்சிகங்களில் இருந்து அவைகள் (இலக்கினத்திற்கு) 4- ஆமிட மானால் தோஷந் தருவதில்லை.

அங்காரகன் மணமக்களுக்கு மகரம் கடகம் இவற்றிலிருந்து அவை (இலக்கினத்திற்கு) 7 ஆமிட மானால் தோஷஞ் செய்வதில்லை.

அங்காரகன் வதூவரர்களுக்கு தநுசு மீனம் இவைகளில் இருந்து அவை (இலக்கினத்திற்கு) 8 ஆமிடமாயின் தோஷந் தருவதில்லை.

அங்காரகன் தம்பதிகளின் ஜாதகங்களில் கும்பம் சிம்மம் ஆகிய இவைகளுள் இருந்தால் தோஷந் தருவதில்லை.

அங்காரகன் தம்பதி ஜாதகங்களில் சந்திரனுடன் சேர்ந்திருந்தாலும் குருவுடன் சேர்ந்திருந்தாலும் எவ்வகைத் தோஷமும் செய்யாத பல்வகை நன்மையையும் தருவமென தேவகோள ஆசிரியர் கூறுகின்றார்.

குறிப்பு:—இதிற் கூறப்பெற்றன சுலோகார்த்தங்கள் யாவும் பல முனிபுங்கவர்கள், திருவாய் மலர்ந்தன எனினும், இவை யொன்றை யொன்று தழுவியுள்ளனவாகவே காணப் பெறுகின்றன. எஃது எவ்வாறாயினும் அடியேன் மூலச்சுவடியிலுள்ளபடியே இதனை வரைந்து அச்சேற்றி யுள்ளேன். ஆகலின் சோதிட வுலகம் என்னைப் பொறுத்தருளுமாக. அன்றியும் இதனிற் கண்டுள நன்மைகளை நோக்கி என்னை ஆசிர்வதித்தருளுமாக. சுபம்.

அருணகிரி நாதன் அகத்தமர்ந்த
குமாரகுருபரன் திருவடி வாழ்க.

முற்றும்

---

மனோரஞ்சனி பிரஸ், சௌகார்பேட்டை, சென்னை.

உ

குகமயம்.

ஓம் குமார குருப்யோ நம:

## பிரகடனம்.

# யோகமஞ்சரி மூலமு முரையும்.

---

உலக முவப்புறும் யோகபோகங்களை உரைக்க வல்ல இந்நூல் நாரதாதி மகருஷிகளால் சொல்லப் பெற்றது. மக்கள் யோகம் மாண்புரைக்க வல்லது. இஃது அளவில் சிறுத்துப் பொருளிற் பொலியும் பெருநூல் இது ஜோதிர் சாஸ்திரத்திற் கின்றியமையா யோக போக போக்கிய பாவங்களைத் திட்டமுந் தெளிவுமாய்த் தெரிவிக்க வல்லது. எல்லா மனிதர்க்கும் ஏதோ ஒருவகை அதிருஷ்ட யோகம் உண்டென்ப தண்மையே. எனினும் சிலருக்கு இத்திற யோக பாவங்கள் தோன்றுவதும் தோன்றி மறைவதுமாய்த் துலங்கி மறைகின்றன. இவ்வாறுவதற்குக் கிரக சாரங்களின் பலாபலன்களே யாமென்ப. இந்த வகை விவரங்களை இந்தச் சிறுநூல் தெளிவாக எடுத்துரைக்கின்றது. இது ஜாதக பலன்களைக் கணக்கிட்டு வகை தொகையாய்க் கூறவல்லது. இஃது இன்னின்ன இடத்தில் இன்னின்ன கிரகங்கள் இன்னின்னபடி இருப்பின் இன்னின்ன யோகங்கள் இன்னின்னபடியா மென்று எடுத்துரைக்க வல்லது.

இஃது எனது சகோதரரும் ஆசிரியருமாகிய ஜோதிட வைத்திய பண்டித ஸ்ரீமாந் சு. ஏ. குமாரஸ்வாமி ஆச்சாரியாரால் தொகுக்கப் பெற்றது. அன்றியும், எனது போதகாசிரியரும் பிறையாறு லூத்தரன் மிஷியோன் பெண்கள் பாடசாலைத் தமிழ்ப்பண்டிதரும் மதுரைத் தமிழ்ச் சங்க வித்துவானுமாகிய ஸ்ரீமாந் ப. அ. கிருஷ்ணஸ்வாமிப் பிள்ளை யவர்களின் முன்னுரையினையும் பொழிப்புரையினையுங் கொண்டுள்ளது.

இது 100 யோக பாவங்களைத் தெளிவாய்க் கூறவல்லது. அவை வருமாறு:—சுபயோகம்-ஆயுர்யோகம்-குசுமயோகம்-சாபயோகம்-சக்கரயோகம்-நாகயோகம்-நாபியோகம்-முரசயோகம்-பத்யயோகம்-வஜ்ரமத்யோகம்-பர்வதயோகம்-காகளயோகம்-பாரதியோகம் - களாநிதி யோகம் - தேவேந்திரயோகம்-மாலாயோகம்-மதனமாயோகம்-விபாவசு-யோகம்-நாளயோகம்-சார்மூகயோகம்-இந்திரயோகம்-கதாயோகம்இரவியோகம்-பாரிஜாதயோகம்-கங்காப்பிரவாயோகம்-கஜயோகம் அமரகயோகம்-காமினியோகம் - நாளிகயோகம் - வித்யுத்யோகம் பத்திரயோகம்-கிருபயோகம்-தூயயோகம் - மிருகயோகம் - காந்தர்வ யோகம் - சண்டயோகம்-நாகேந்திரயோகம்-மகுடயோகம் - சித்திர யோகம்-விருஷ்டியோகம்-சண்டிகாயோகம்-பூபயோகம் - முசசமா யோகம்-சந்திரிகாயோகம்-தண்டகயோகம்-இரசாதலயோகம் -யுக்ம யோகம்-நாவீரயோகம்-அங்குராயோகம்-பவியபாயோகம் - பேரி யோகம்-காருடயோகம்-தேவயோகம்-தருமயோகம்-குமோதயோகம் இராஜ்ஜயோகம்-அங்கயோகம்-திரிம்சாம்சயோகம் - கோளயோகம் கோயோகம்-ஸ்ரீமத்யோகம்-மாரிதயோகம்-அலாபயோகம் - அதிலாப யோகம் - துராந்தரயோகம் - அதியக்ஷயோகம் - இஷ்டபாலயோகம் இராஜயோகம்-இராஜபதயோகம்-அமோகயோகம்-சிருங்காடயோகம் திரிலோசனயோகம் - க்ஷேமயோகம் - யூபயோகம் - சத்திரயோகம் -சமுத்திரயோகம் - கேதாரயோகம் - கேசரியோகம் - உத்தமயோகம் தனுகர்ஷணயோகம்-உபஜயயோகம்-குலவர்த்தனயோகம் -- வாகன யோகம் -- ஜெயயோகம் -- மிருதங்கயோகம்- - சாரதாயோகம்--சுக யோகம்-- சாம்ராஜ்யயோகம் - - அர்த்தயோகம் -- தர்க்கேசயோகம் திரிகூடயோகம் -. சாமரயோகம் -- சிவயோகம் - விஷ்ணுயோகம் சதுர்முகயோகம்--கௌரியோகம்-சந்துகயோகம்-இலட்சுமியோகம்-சக்கரயோகம்.-ஸ்ரீயோகம்..அஷ்டைஸ்வரியயோகம் முதலியன.

இந்நூல் பெறவிரும்புவார் முற்பணமாக ரூ. 1—0—0 அனுப்ப வேண்டும். அச்சிலிருந்து வெளிவந்தவுடன் புத்தகம் அனுப்பப் பெறும். சுபம்.

ஏகாம்பர ஆச்சாரி வீதி
பறங்கிப்பேட்டை

இங்ஙனம்,
சு.ஏ. முத்துக் குமாரஸ்வாமி,
சித்தாந்த கணித ஜோதிஷன்

---

மநோரஞ்சினி பிரஸ், சௌகார்பேட்டை, மதராஸ்